




# ஸ்ரீ ரா...

# ஸாரஸங்கிரகம்





# Ramayana . .

# Sarasangraha.

BY

**R. Vedantacharlu F. M. U.**

Retired Dewan of Pudukotta.




Srirangam:

SRI VANI VILAS PRESS.

1911.

*Second Edition]*

37-2

# PREFACE.

THIS little brochure is specially written in very simple and flowing style for the use of our young boys and girls who now-a-days betray a lamentable ignorance of even the main incidents of this great national Epic. As the Hon. Mr. P. Ramanathan has said in one of his recent utterances at Madras, "The value of the Puranas and the Itihasas cannot be too highly estimated." His statement that "Instead of imitating the Westerns in the production of Novels, the graduates should render in popular language the teachings of the Ramayana and the Mahabharata" is one which should have the ready endorsement of all sane thinking Hindus. As an attempt to educate the minds of our youngsters and to stir up in them an interest towards our national ideals, the mere outline of the sublime story of this grand Epic is sketched here in a very popular style. Our thanks are due to Mr. R. Vedantacharlu who at our request kindly condescended to write this precious story in such simple language.

T. K. Balasubrahmanyam.



# ஸ்ரீராமாயண  



# ஸாரஸங்கிரகம்.

பூர்வம் விச்ரவஸு என்பவருக்கு மூன்று குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களுக்கு முறையே இராவணன் என்றும் கும்பகர்ணனென்றும், விபீஷணன் என்றும் பெயர்.

இவர்கள் மூவரும் அதிக உக்கிரமான தபவினால் பிர்ம்மதேவனைக்குறித்து ஆராதிக்க, அந்தக் கமலாஸனனும் பிரத்தியக்ஷராகி, "உங்களுக்கு அபேக்ஷையென்ன?"

என்று கேட்டார். தம்மை வணங்குகின்றவர்களிடம் அதிகமான பிரீதியை வைக்கக்கூடியவராகையால் அந்த நான்முகனிடம் இந்த மூன்று ராக்ஷஸர்களும் தங்களுக்கு இஷ்டமான வரன்களையெல்லாம் அபேக்ஷித்தார்கள்.

இராவணன் மனுஷ்யர் நீங்கலாக மற்றைய ஒருவராலும் தனக்கு அழிவில்லாமையை அப்பிதாமகனிடம் வரனகப்பெற்றுக் கொண்டான்.

கும்பகர்ணனேவெனில், தேவர்கள் இல்லாமற்போகவேண்டுமென்ற அபிப்பிராயங் கொண்டு, "நிர்தேவத்வம்" வேண்டும் என்று கேட்க இருந்தவன் விதிவசத்தினல் 'நித்திரைத்வம்' என்று வாய்குழறிக் கேட்டுப் பெருந் தூக்கத்தைத் தனக்கு வரனக அடைந்தான்.

விபீஷணரோ, ஸாத்விககுணமுள்ளவரா கையால் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் தமக்கு எப்போதும் நீங்காத பக்தியுண்டாகவேண்டுமென்று இந்த உத்தமமான வரத்தையபேக்ஷித்து அந்தப்படியே அந்த ஹம்ஸத்வஜனால் கொடுக்கப்பெற்றார்.

இந்தப்படி இம்மூவருக்கும் அவரவர்கள் அபேக்ஷித்தவண்ணம் வரன்களை யளித்துவிட்டு ஸர்வலோகநியந்தாவாக இருக்கிற பிர்ம்மாவானவர் அந்தர்த்தானமாய்விட்டார்.

அதன்பின்பு ராக்ஷஸோத்தமனான இராவணன் அங்கிருந்துபோய்க் குபேரனென்று விளங்குகின்ற தனாதிபனை யுத்தத்தில் ஜயித்து லங்காராஜ்யத்தையும், அவனிடத்திலிருந்த 'புஷ்பகம்' என்று பிரஸித்திபெற்ற விமானத்தையும் அபகரித்துக்கொண்டு

அந்த லங்காநகரத்திலேயே சுகமாக வஸித்துக்கொண்டுவந்தான்.

பின்னர், பாதாளவாஸிகளான எல்லா ராக்ஷஸர்களும் கூடி ராவணனை யனுஸரித்துக்கொண்டு லங்காபட்டணத்தில் ஸுகமாக வாழ்ந்துவரும் நாளில் ராவணன் மயன் என்னும் அஸுரனது புத்திரியாகிய மண்டோதரியை விவாகஞ்செய்துகொண்டு அவளிடத்தில் மேகநாதன் என்ற புத்திரனைப் பெற்றான்.

அந்த ராவணன் ஸவர்க்க, மத்ய, பாதாள மென்கிற திரிலோகங்களையும் ஜயித்து அங்கங்குள்ள ரூபவதிகளான ஸ்திரீகளெல்லோரையும் பலாத்காரமாக அபகரித்து உபத்ரவித்து அவர்கள் கற்பையழித்தும், பிராமணர்களை ஹிம்ஸித்தும், தேவேந்திரனைப் பிடித்துக்கொண்டும் இருந்ததோடு அவ்வி

ந்திரனுக்கே உரிய கற்பகவிருக்ஷமுதலானவற்றையுங் கொண்டுவரச் செய்து அவற்றை லங்காபுரியில் ஸ்தாபித்தும், மற்றும் இவைபோன்ற பல அக்கிரமங்களைச் செய்து கொண்டும் வந்தான். இவற்றைக்கண்டு ஸகிக்கமாட்டாத தேவதைகளெல்லாரும் ஒருங்குசேர்ந்து பிர்ம்மாவினிடஞ்சென்று ராவணனால் பிரதிதினமும் தங்களுக்கு உண்டாகின்ற ஸகல விதமான உபத்திரவங்களையும் பற்றிச் சொல்லி முறையிட்டார்கள்.

கமலாஸனன் அதைக்கேட்டுத்தேவர்களுடன் க்ஷீராப்திசேர்ந்து அங்கே பலவிதமாய் ஸ்ரீமந்நாராயணனைக் குறித்து ஸ்தோத்திரஞ்செய்ய பக்தவத்ஸலரான அப்புருஷோத்தமன் அவர்களுக்குப் பிரத்தியக்ஷராகித் தேவர்களுடன் நிற்கிற பிர்ம்மாவைப்பார்த்து, "எதற்காக நீங்கள் வந்திருக்கிறீர்கள்?"

என்றுவினவ, பிர்மதேவன் ராவணுதிராக்ஷஸர்களால் உண்டாகின்ற மிகுந்த கஷ்டத்தைத்தெரியப்படுத்த, ஸ்ரீமந் நாராயணனுந் திருவுள்ளமிரங்கி, "கேளுங்கள் தேவர்களே! நீங்கள் இனிப் பயப்படவேண்டாம். நாம் தசரத சக்ரவர்த்திக்குப் புத்திரராக அவதரித்து ராவணனை ஸம்ஹாரம் செய்து விடுகின்றோம்" என்று அபயப்ரதானம் பண்ணி ஸகலதேவர்களையும் ராவணவதத்தின்பொருட்டுத் தனக்கு ஸகாயமாய்ப் பூமியில் வானரர்களாகப் பிறக்கவேண்டுமென்று அருளிச்செய்துவிட்டு அந்தர்த்தானமாய்விட்டார். பிர்ம்மாவுந் தேவகணங்கள் புடைசூழத் தமது இருப்பிடஞ் சென்றனர்.

பிறகு தேவேந்திரன் வாலி என்ற பிரஸித்தமான வானரத்தையும், சூரியன் சுக்கிரீவன் என்ற வானரத்தையும், வாயு ஹநு

மானையும் உண்டாக்கினார்கள். பிர்ம்மா பூர் வத்திலேயே ஜாம்பவான் என்ற கரடியைச் சிருஷ்டித்துவிட்டார். மற்றுமுள்ள தேவதைகளும் இந்தப்பிரகாரம் அநேகம் வானரர்களையுண்டாக்கினார்கள்.

வானரக் கூட்டங்களுக்கு வாலி அதிபதியாகிக் கிஷ்கிந்தா ராஜ்யத்தில் வஸித்து வந்தான். இவை நிற்க.

சூரிய வம்சத்தில் தசரதன் என்று பிரஸித்தனைகப் பேர் பெற்று விளங்கின மகாராஜா ஆவிர்ப்பவித்தார். இவர் மூன்று ஸ்திரீகளைப்பத்தினியாக அடைந்தும் அவர்களுக்குள் ஒருவருக்காவது ஸந்தானமுண்டாகவில்லை. மந்திரியான ஸுமந்திருடைய வாக்கைக்கொண்டு ரிஷியசிருங்க மகரிஷியைத்தருவித்துப் புரோகிதர்களுடன் புத்திரகாமேஷ்டியென்னும் யாகத்தைக் கிரம

மாகத்தொடங்கிநடத்தினர். அந்த யாகத்தின் அக்கினிகுண்டத்திலிருந்து ஸ்வர்ணமயமான பாயஸபாத்திரத்துடன் ஒருவர் எழுந்து வந்து தசரத மஹாராஜாவைப் பார்த்துத் "தாங்கள் இந்தப்பாயஸத்தைத் தங்களுடைய பாரியைகளைக்கொண்டு சாப்பிடச்செய்வீராக" என்று ஆக்ஞாபித்து விட்டு அந்தப் பாயஸபாத்திரத்தையும் ராஜாவிடம் கொடுத்துவிட்டு மறைந்து விட்டார்.

அந்தப்படி தசரதமஹாராஜா அப்பாயஸத்தை அதிக சிரத்தையுடன் தமது மூன்று பத்னிகளையும் அழைத்துச்சாப்பிடச் சொன்னார். அந்தப்படி பாயஸம் சாப்பிட்ட காரணத்தை முன்னிட்டுக்கொண்டு மஹாராஜாவிடத்தில் மூவரும் கர்ப்பத்தையடைந்தார்கள்.

மாஸம் பூர்த்தியானவுடன் கௌஸல்யை என்ற ராஜபத்னியிடம் ஸ்ரீராமபிரான் திருவவதரித்து ஸஜ்ஜனங்களாகிற தாமரை புஷ்பங்களுக்குச் சூரியன்போல விளங்கினார். கைகேயியினிடம் பரதனும், ஸுமித்திரையிடம் லக்ஷ்மண சத்ருக்கனர்கள் இருவரும் ஆவிர்ப்பவித்தார்கள்.

இப்படி இராம லக்ஷ்மண பரத சத்ருக்கனர்களாகிய நான்கு புத்திரர்கள் உண்டாக, ஆனந்தக்கடலில் மூழ்கியிருந்த தசரதமஹாராஜா பிராமணர்களைக்கொண்டு கிரமப்படி அந்தப் புத்திரர்களுக்கு ஜாதகர்மாதிக் கிரியைகளை யெல்லாம் நன்றாக நடத்தினார்.

பிறகு நாளடைவில் அந்த ராஜகுமாரர்கள் நான்குபேர்களும் பரஸ்பரம் சிநேகிதர்களாக வளர்ந்துகொண்டு ஸகலமான

வித்தைகளேயுங் கற்றுணர்ந்த மகா ஸாமர்த்திய முள்ளவர்களானார்கள்.

இப்படி இருக்குங்காலத்தில் ஒரு நாள் விசுவாமித்திர மகாமுனிவர் தசாத சக்கா வர்த்தியிடம் வந்து தாம் செய்யப்போகிற யாகஸம்ரக்ஷணத்தின்பொருட்டு ஸ்ரீராமபிரானைத் தம்மோடனுப்ப வேண்டுமாய் அபேக்ஷித்தார். அறுபதினுயிரம் வருஷத்திற்குப்பின் பிறந்த அருமைக் குமாரனையனுப்ப மனமின்றிப் பலவாறுகச் சொல்லியும் கடைசியில் தாமே வருகிறதாகச் சொல்லிப் பார்த்தும் விசுவாமித்திர மகரிஷி ஒரே பிடிவாதமாக ஸ்ரீராமனேயே அபேக்ஷித்ததில் வஸிஷ்ட மகாமுனிவருடைய வாக்குப்படி லக்ஷ்மணரோடுகூட ஸ்ரீராமனே அந்த விசுவாமித்திர முனிவரிடம் தசரதசக்கரவர்த்தி ஒப்புவித்தார்.

அந்த மகா முனிவர் அந்த ராஜகுமாரர்கள் இருவரையும் அழைத்துக்கொண்டு போகையில் வழியில் அவர்களுக்குப் பலை, அதிபலை என்ற இரண்டு மந்திரங்களையும் உபதேசித்து மற்றும் ஸம்பூர்ணமான அஸ்திரங்களையும் படிப்பித்தார்.



அவர்கள் செல்லும் வழியில் லோகோபத்திரவத்தில் தாத்பரியமுள்ள தாடகை என்ற ராக்ஷஸி குறுக்கிட்டாள். விசுவாமித்திரராலே கேட்டுக்கொள்ளப்பட்டவராய் ஸ்ரீராமன் ஒரு பாணத்தினால் அவளை வதஞ்செய்துவிட்டார்.

பிறகு விசுவாமித்திரர் தம்முடைய ஸித்தாசிரமம் போய்ச்சேர்ந்து ஸ்ரீராமலக்ஷ்மணர்களோடு யாகத்தைக் கிரமமாக ஆரம்பித்து நடத்திவர, அப்போது யக்ஞவிரோதிகளான ராக்ஷஸர்களும் அதற்கு விகாத

ஞ்செய்ய வந்தார்கள். விசுவாமித்திரரது வேண்டுகோளின்படி ஸ்ரீராகவன் மாரீசனென்ற மாயாவி ராக்ஷஸனை அஸ்திரத்தினாலே தொலை தூரத்தில் ஸமுத்திரத்தில் போய் விழும்படி செய்துவிட்டு ஸுபாகு முதலிய மற்றராக்ஷஸர்களைப் பாணங்களால் கொன்றுவிட்டு விசுவாமித்திர முனியின் யக்ஞத்தைக்காத்து ரக்ஷித்தார்.

மிதிலா பட்டணத்தில் ஸீதையின் ஸ்வயம்வரஸம்பந்தமாய் அழைக்கப்பட்ட விசுவாமித்திரர் ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடன் அந்த ராஜதானியைப் பார்த்துவரப்போனார். அங்கு மார்க்கத்தில் சாபத்தால் கல்லாகச் சமைந்துகிடந்த கௌதமபாரியையான அஹல்யை என்ற மாதரசியானவள் ஸ்ரீராமனுடைய பாததூளி தன்மேற்பட்ட மாத்திரத்தில் அந்தச்சாபந்தீர்ந்து மறுபடியும்

முன்போலவே ஸ்திரீயாக எழுந்தாள். பிறகு மூவரும் மிதிலாநகரம் போய்ச்சேர்ந்தார்கள்.

அங்கே ஜனகமகாராஜா விசுவாமித்திர மகரிஷியையும், ராஜகுமாரர்களேயும் வெகுவாக நல்வரவுகூறியுபசரித்தார். கௌசிகரும் ராமன் பராக்கிரமத்தையும், சூரியகுலத்தின் பெருமையையும் ஸவிஸ்தாரமாக எடுத்துச்சொன்னூர். அதைக்கேட்ட ஜனகரும் ஆனந்தமுற்றுத் தாம் கன்யாசுல்கமாக வைத்திருக்கின்ற சிவதனுஸின் பெருமைகளே யெடுத்துச்சொல்லி அவ்வில்லே நாணேற்றித் தம் அருமைப்புத்திரியான ஜாநகியை ஸ்ரீராகவன் மணம்புரியும்படியாகச் செய்யவேண்டுமென்று பலவாருகப்பிரார்த்தித்தார். விசுவாமித்திரரும் அப்பிரார்த்தனேக்கிணங்கிக் கார்மேகவண்ணனை ஸ்ரீராமனே

ப்பார்த்து அவ்வில்லை நாணேற்றும்படியாக ஆக்ஞாபித்தார். அதுவரையிலும் பசுப் போல் அடங்கியிருந்த ஸ்ரீராகவன் மிருகேந்திரனை சிங்கம்போல் எழுந்து யாவரும் வியக்கும்படி கம்பீரமாக நடந்து அவ் வில்லை எடுத்து நாணேற்றி ஓரிமைப்போதி லிரண்டுதுண்டாக முறித்தான்.

ஜனக மகாராஜா தூதர்களையனுப்பி அயோத்தியா நகரத்திலிருந்து தசரத சக்கரவர்த்தியை அவருடைய ஸகலபரிவாரங்களுடன் தருவித்து, ஸ்ரீராமன் முதலான நான்கு புத்திரர்களுக்கும் ஸீதை முதலிய தம்முடைய நான்கு கன்னிகைகளையும் முறையே கன்னிகாதனஞ் செய்துகொடுத்தார்.

ஜனக மகாராஜாவினால் கிரமப்படி வெகு மதிக்கப்பட்டு ஸ்ரீராமன் தனது தம்பிகளுடன் அயோத்தியா நகரத்துக்குப் புறப்பட்டுச்

செல்லுகிறபோது, ஸ்ரீராமன் சிவதனுஸை முறித்துவிட்ட சமாசாரத்தைக் கேட்டுக் கோபங் கொண்ட பயங்கரமான பரசுராமனை வழியில் சந்தித்து அவரோடு பொருது அவரை ஜயித்து அயோத்தியை யடைந்தார்.

ஸ்ரீராமன் ஸீதாதேவியுடன் அயோத்தியில் சுகமாக வஸித்துக்கொண்டு ஸகலஜனங்களையும் தம்முடைய நல்ல நடவடிக்கை, வித்யை, ஸாமர்த்தியம் முதலியவற்றால் ஸந்தோஷிக்கச் செய்துவந்தார்.

இப்படி யிருக்கையில் தசரத சக்கரவர்த்தி ஸ்ரீராமபிரானுக்கு ராஜ்யப்பட்டாபிஷேகஞ்செய்ய உத்தேசித்து மந்திரிமுதலியவர்களுடன் ஆலோசித்து அதற்காகவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

இந்த சமாசாரத்தைக் கேட்ட மந்தரை

என்ற கூனி என்பாள் பரதன் தாயாரான கைகேயி என்ற ராஜபத்னியிடம்போய் ஸ்ரீ ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கப் போகிறதைப் பற்றிச் சொல்லி, கைகேயி யைப் பரதனுக்குப் பட்டாபிஷேக மாகவே ண்டுமென்று சொல்லும்படிப் பலவாருகப் போதித்துத் தூண்டிவிட்டாள். அதனுல் ஸத்தியபிரதிக்ஞையுடையவரான தசரத மகாராஜாவினிடம் வெகுகாலத்திற்கு முன் னே தேவாசுர யுத்தத்தில், தனக்கு அவ ரால் வாக்குதத்தஞ் செய்யப்பட்டவை யான இரண்டு வரன்களேக் கைகேயி அபேக்ஷித்தாள்.

ஸத்தியந்தவருத அந்தச் சக்கரவர்த்தி கைகேயி அபேக்ஷித்தபடியே ஸ்ரீராமன் பதி னுன்கு வருஷம் வனவாஸம் போகிற தென்ற ஒருவரத்தையும், அவள் குமாரன்

பரதனுக்கு ராஜ்யபட்டாபிஷேகம் செய்து வைக்கிறதென்ற மற்றொரு வரத்தையும் கொடுத்தார்.

ஸீதாலக்ஷ்மணஸமேதராய்ஸ்ரீராமன் பிதிருவாக்யபரிபாலனமான முக்கியதர்மத்தை அனுஷ்டிக்கும் பொருட்டு மாதாபிதாக்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு காட்டுக்குப்போகையில் அயோத்தியா பட்டணத்திலேயுள்ள ஸகலமான ஜனங்களும் அவரவர்களுடைய வீடு வாசல்களையெல்லாம் வேண்டாமென்பதாக நீக்கிவிட்டு ஸ்ரீராமபிரானைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அந்த ஜனங்கள் ராத்திரியில் நித்திரைசெய்யும் வேளைபார்த்து ஸுமந்திரரென்ற மந்திரியால் வகிக்கப்பட்ட ரதத்தின்மீது ஏறிக் காட்டைப் பார்க்கச் சென்றார். கங்காநதிக் கரையில் குஹபுரத்திற்குச் சென்றதும் குஹனால் ஸத்கரிக்கப்பட்டவராய்க்கொண்

டு அன்று ராத்திரி அங்கு தங்கியிருந்து மறுநாள் மந்திரியையனுப்பிவிட்டு, ஸ்ரீராமன் ஸீதாலக்ஷ்மணருடன் குஹனால் கொண்டுவரப்பட்ட தோணியிலேறி அந்நதியைக் கடந்து அப்புறஞ்சென்று பரத்துவாஜ முனிவர் ஆசிரமம் அடைந்து அவரை நமஸ்கரித்து அவரால் உபசரிக்கப்பட்டவராய்ச் சித்திரகூட மென்னும் சோலைமலையில் ஸுகமாகவஸித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீராமனைக் காட்டுக்குக் கொண்டுபோய் விட்ட துக்கத்தினால் பரவசராயிருந்த ஸுமந்திரர் அயோத்திக்குப் போய், தசரத சக்கரவர்த்தியினிடம் நடந்த வர்த்தமானத்தைச்சொல்ல அதைக்கேட்ட மாத்திரத்தில் சக்கரவர்த்தி அதிக வியசனத்தால் மூர்ச்சையடைந்து கீழே விழுந்து அழுதழுது பிரலாபித்துக் கொண்டு ராம, ராம, என்று

புலம்பிக்கொண்டே சரீரத்தை உபேக்ஷித்து ஸ்வர்க்கம் போய்ச்சேர்ந்தார்.

பின்பு வஸிஷ்ட முனிவர் சொற்படி மந்திரிகள் தசரதசக்கரவர்த்தியின் சரீரத்தை தைலத்தினல் பத்திரப்படுத்தித் தூதர்களை யனுப்பி அம்மான் கிருகத்திற்குப் போயிருந்த பரதனை அழைப்பித்து மகாராஜாவுக்கு உத்தரக்கிரியைகளைக் கிரமமாக நடப்பிவித்தார்கள்.

தம்முடைய மாதாவினல் பிதா மரணமடையும்படியாயிற்றேயென்று பரதன் மனவருத்தமுற்று, மந்திரிகளால் மாதாவின் கருத்தின்படி ராஜ்பத்தை ஒப்புக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்பட்டுங் கேளாமல் ஸ்ரீராமனைத் திரும்ப அயோத்திக்கு அழைத்துவர உத்தேசித்து, அந்நகரவாஸிகளுடன் காட்டைநோக்கிச் சென்றார். மரவுரி,

ஜடை இவற்றைத்தரித்து உருமாறிச் சித்தி ரகூடத்தில் வஸிக்கிற ஸ்ரீராமனைக்கண்டு நமஸ்கரித்து வஸிஷ்டர் முதலியவர்களுட ன் மறுபடி அயோத்திக்குச் சென்று ராஜ் யத்தை ஒப்புக்கொண்டு பிரஜைகளை ரக்ஷி க்கவேண்டுமென்று அபேக்ஷித்தார்.

'பிதிரு வாக்கியப்படி பதினான்கு வருஷ மும் சென்றுதான் நான் திரும்பிப்பட்ட ணம் வருவேன்' என்று ஸ்ரீராமன் சொல்லி, பரதன் அபேக்ஷித்தபடி ஸ்ரீபாதுகையை அவனிடம் கொடுத்தருளிப் பரதனை எல் லாருடனும் ஊருக்குத்திரும்பிப் போகும்ப டியனுப்பிவிட்டார்.

வருத்தத்தால் பரவசமாகிவிட்ட மனதை யுடைய பரதன், ஸ்ரீராமனுடைய ஸ்ரீபாது கைகளைக்கொண்டு வந்து நந்திக்கிராமத்தில் அவைகளை ஸ்தாபித்துக்கொண்டு ராஜ்யத்

ஞ்த அவற்றினிடம் ஒப்பிவித்து பூபாலனஞ் செய்து வந்தான். ஸ்ரீராமனையழைத்தும் அவர் வராமலிருந்த நிமித்தம் அதிகக்லேசைத்தையடைந்தவராகிப் பதினான்கு வருஷம் கழித்து ஸ்ரீராமன்வந்து ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளாவிடில் தான் அக்கினிப்பிரவேசம் செய்துவிடுகிறதென்ற பிரதிக்ஞையுடன் ஸ்ரீராமனிடம் செல்லவேண்டிய ஜேஷ்டபிராதிருவாத்ஸல்யத்தையும் சக்ரவர்த்திக்குள்ளமரியாதை முதலியவற்றையும் ஸ்ரீராமபாதுகைகளுக்குக்காண்பித்து வெகுபக்தியுடன் பரதன் ராஜ்யகாரியங்களைப் பார்த்துவந்தான்.

ஸ்ரீராமன் சித்திரகூடத்தைவிட்டுப் புறப்பட்டு அத்திரிமஹரிஷியைக்கண்டு அவரை வணங்கித் துதி செய்து அந்த மஹரிஷியின் பர்ணசாலையில் ஒரு ராத்திரி தங்கி

யிருந்தார். அப்போது அந்த ரிஷிபத்தினி தன்னுடைய பூஷணங்களைக்கொண்டு ஸீதாதேவியை அலங்கரித்தாள்.

மறுநாட் காலையிற் புறப்பட்டு ஸ்ரீராமன் ஸீதையோடும் லக்ஷ்மணரோடும் தண்டகாரண்யம் போய்ச்சேர்ந்து அங்கே எதிர்ப்பட்ட விராதன் என்ற ஒரு கொடிய ராக்ஷஸனை நிக்கிரகித்துவிட்டார்.

பிறகு சரபங்கர் என்ற முனிவரின் பர்ணசாலைக்குச் சென்று அவ்விடத்திலிருந்த ரிஷிகளால் அபேக்ஷிக்கப்பட்டபடி அவர்களை ஹிம்ஸித்துவந்த ராக்ஷஸர்களையெல்லாம் அழித்துவிடுவதாக ஸ்ரீராமன் அவர்களுக்கு அபயப்பிரதானஞ்செய்துகொடுத்துவிட்டு ஸுதீக்ஷணரென்னும் மகரிஷியை நமஸ்கரித்துஅவரால்உபசரிக்கப்பட்டபின் அகஸ்தியமகாமுனிவரின் ஆசிரமம் போய்ச்

சேர்ந்து அவரை நமஸ்காரஞ்செய்தார். அந்த அகஸ்தியர் விஷ்ணுஸம்பந்தமான வில்லையும் இந்திரஸம்பந்தமான இரண்டு தூணிகளையும் பிர்ம்மாஸ்திரத்தையும் வாளையும் ஸ்ரீராமனுக்கு ஆசீர்வதித்துக்கொடுத்தார்.

அவைகளைப் பெற்றுக்கொண்டு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு அப்புறஞ்செல்லுங் காலத்தில் வழியில் ஜடாயு என்கிற பக்ஷிராஜனைக்கண்டு ஸீதாரக்ஷண நிமித்தமாய்த் தமது பிதாவினுடைய மித்திரனை அந்தப் பக்ஷிராஜனைப் பிரார்த்தித்தார்.

பின்பு பஞ்சவடீதீரம்போய்ச் சேர்ந்து அங்கு லக்ஷ்மணனால் கட்டப்பட்ட பர்ணசாலையில் ஸீதையோடுங்கூட ஸுகமாக வஸித்துவந்தார்.

அங்கு ஒரு தினம் சூர்ப்பணகை என்

னும் ராக்ஷஸஸ்திரீ வந்து ஸுந்தரமூர்த்தி
யான ஸ்ரீராமனைத் தனக்கு கணவனாகவே
ண்டுமென்று அபேக்ஷித்தாள். அவரால் த
ள்ளுப்பட்டுப் பின் லக்ஷ்மணனிடம்போய்
அவரை அபேக்ஷித்ததில் அவராலும் நிக்கி
ரகிக்கப்பட்டு, காமபரவசையாயிருந்த அ
வள் மன்மதனுக்கு நிகரான ஸ்ரீராமனையே
எந்தவிதத்திலாவது அடையவேண்டுமெ
ன்று மீண்டும் அவரிடஞ்சென்று அவரோடு
வாதஞ்செய்ததில் முன்போல் மறுபடியும்
வேண்டாமென்று தள்ளப்பட்டதனால் அந்
தக்கோபத்தை முன்னிட்டுக்கொண்டு ஸீ
தாதேவியை உபத்திரவிக்க ஆரம்பித்ததில்
லக்ஷ்மணருக்குக் கோபமுண்டாகி அவரால்
காதும்மூக்கும் அறுக்கப்பட்டவளாய்க்கொ
ண்டு வெகு வருத்தத்துடன் தன் தேசம்
போய்க் கரன் என்ற ராக்ஷஸனிடம் பஞ்ச

வடீதிரத்தில் தனக்கு நேர்ந்த தைச் சொல்லி முறையிட்டாள்.

அதுகேட்ட கரன் கோபாக்கிராந்தனுய்த் தூஷணன், திரிசிரசு, முதலிய ராக்ஷஸக்கூட்டங்களுடன் அரண்யம் வந்து ஸ்ரீராமனை நிக்கிரகிக்க உத்தேசித்துப் போர் செய்ய ஆரம்பித்தவுடன் ஸ்ரீராமன் மகாபராக்கிரமசாலியானபடியால் உடனே ஸீதாதேவியை லக்ஷ்மணனுடைய ரக்ஷணத்துக்குள் வைத்துவிட்டு யுத்தத்தில் கரதூஷணாதிகள் எல்லாரையும் வதஞ் செய்துவிட்டார்.

சூர்ப்பணகை கரதூஷணாதிகளான தன் சகோதரர்கள் நாசமாய்விட்டதில் வெகு துக்கத்தையடைந்து லங்காபட்டணஞ்சென்று இராவணனிடத்தில் நடந்த சகல

விருத்தாந்தத்தையும் ஆதியோடந்தமாக அறிவித்தாள். அதுகேட்ட இராவணன் கோபாவேசங்கொண்டு அவளால் மிகவும் வர்ணிக்கப்பட்ட ஸீதாதேவியை அபகரிக்க உத்தேசித்து மாரீசனுடைய பர்ணசாலை போய் "இந்தக்காரியத்தில் நீ எனக்குச்சகாயஞ்செய்யவேண்டும்" என்று அவனை அபேக்ஷித்தான்.

இராவணனைப் பிரியப்படுத்த நினைந்து மாரீசனும் அத்யத்புதமாக ஒருஸுவர்ணமயமான மான்வேஷம் பூண்டு ஸீதாதேவியின் சமீபம்போய் அவள் கண்ணில்தோன்றும்படி வனத்தில் அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருந்தான். அப்பொன்மானைப்பார்த்த ஸீதாதேவியும் அதன்மேல் ஆசைபற்றி விளையாடுவதற்காக அந்தமானைத் தனக்குப் பிடித்துத் தரவேண்டுமென்று ஸ்ரீராம

னைப் பார்த்துக்கேட்டாள்.

ஸ்ரீராமன் ஸீதையை ரக்ஷித்துக்கொள் ளும்படி லக்ஷ்மணருக்கு ஆக்ஞாபித்துவிட் டுத்தான் காட்டுக்குமத்தியில் அதிக வேக மாக ஓடிக்கொண்டிருக்கிற அந்தமானைத் தொடர்ந்து அதன்பின் சென்றார். அந்த மான் அவர் கையிலகப்படாமல் ஓடிக்கொ ண்டே போனமையால் தொலைதூரஞ் செ ன்றபிறகு அவர் சினங்கொண்டு ஒரு பா ணத்தை எடுத்துப் பிரயோகஞ்செய்து அந்த மானைக்கொன்றுவிட்டார்.

அடிபட்டுக்கீழேவிழுந்தவுடன் மானாகிய மாரீசன் தன்னுடைய சுயரூபத்தையடைந் தவனாய், "ஐயோ! ஆ ஸீதா! ஆ லக்ஷ்மணா!" என்று இராமன் குரலைப்போலே பிரலாபித் துக் கதறினபடியே தன் பிராணனை விட்டு விட்டான்.

ஸீதாதேவி இந்தப்படி மாரீசரோதனத்தைக்கேட்ட மாத்திரத்தில் அது ஸ்ரீராமனுடைய குரலைப்போலவே இருந்தமையால் அவருக்கு ஏதோ அபாயம் நேர்ந்துவிட்டதாக நினைத்து லக்ஷ்மணனைப் போய்ப்பார்த்து வரும்படி ஆக்ஞாபித்தாள். லக்ஷ்மணர் யாரோ ராக்ஷஸன் ஸ்ரீராமன் போலக் கத்திப்பயமுண்டாக்கியிருக்கிறானே தவிர மற்றபடி ஸ்ரீராமனுக்கு ஒருநாளும் எவ்விதமான அபாயமும் நேராதென்று பலவாறாகச் சொல்லியுங் கேட்காமல் அவள் அவரை மறுபடியும் போய்ப்பார்த்துவிட்டுத்தான் வரவேண்டுமென்று நிர்ப்பந்தித்ததின்மேல் லக்ஷ்மணர் ஸீதையைத் தனியாகப் பர்ணசாலையில் விட்டு விட்டுப் போகவேண்டியிருந்ததால் அவ்வனதேவதைகளைப் பிரார்த்தித்துத் தானில்லாத காலத்தில் அவர்களைக்கொண்டு

ஸீதையை ரக்ஷித்து வரும்படி செய்து ஸ்ரீ ராகவன் போன மார்க்கத்தை நோக்கிச் சென்றார்.

ஸீதாதேவி தனியாக இருக்கிற சமயம் பார்த்து இராவணன் ஸந்நியாசி வேஷம் பூண்டு பர்ணசாலையில் புகுந்து ஸீதையை எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கமாய் லங்கையைப்பார்த்துத் திரும்பிப் பிரயாணஞ் செய்தான்.

வழியில் ஜடாயு, இராவணன் ஸீதையைக்கொண்டுபோகிறதை ஆகாசத்தில் பார்த்துக் கோபங்கொண்டு இராவணனிடம் போய் வழியில் குறுக்கிட்டு மறித்து அவனைத் தன்னுடைய மூக்கு நுணியினாலும், இறகுகளாலும், நகங்களாலும் வெகு விதமாகப் போர்செய்து ஹிம்ஸித்தும் அவனை ஜயிக்க முடியாமல் அவனுடைய சந்திர

காசமென்ற வாளால் வெட்டுண்டு சிறகற்ற வராகப் பூமியில் வந்து விழுந்துவிட்டார். உடனே ராவணன் ஸீதையைத் தூக்கியெடுத்துக்கொண்டு லங்காபுரத்தில் தன் அரண்மனை போய்ச்சேர்ந்து ஸீதையை அசோகவனத்தில் சிறையாக வைத்து அவளுக்குக் காவலாகவும் ரக்ஷணார்த்தமாகவும் ராக்ஷஸஸ்திரீகளை ஏற்படுத்திவைத்தான்.

இதற்கிடையே இராமனோவென்றால் மாரீசனைக்கொன்றுவிட்டுத் திரும்பிப்பர்ணசாலைக்கு வருங்காலத்தில் வழியில் சந்தித்த லக்ஷ்மணரால் சொல்லப்பட்ட விருத்தாந்தத்தைக்கேட்டு மனவருத்தமுற்று, ஸீதாதேவியைப் பார்க்க வேண்டுமென்று அதிவேகமாகப் பர்ணசாலைக்கு வந்து பார்த்ததும் அவ்விடத்தில் ஸீதையைக் காணமல் வெகு வருத்தத்தையடைந்தவர்களாக ஸீ

தையைத் தேடிக்கொண்டு போகையில் நடு வனாந்திரத்தில் இறகுகள் வெட்டுப்பட்ட ஜடாயுவைக் கண்டு அவரால் சொல்லப் பட்ட ஜானகியின் விருத்தாந்தத்தைக்கே ட்டு வியசனித்தார்கள். ஜடாயு உடனே இறந்துவிட்டமையால் அவரைத் தகனஞ் செய்து உத்தரக்கிரியைகளையும் நடத்தி விட்டு ஸ்ரீராமன் லக்ஷ்மணருடன் வனத்தில் மறுபடியும் சென்றார். மார்க்கத்தில் குறுக் கிட்ட அயோமுகி என்னும் ராக்ஷஸியை லக்ஷ்மணர் செவிமூக்கறுத்து விட்டார். பிறகு கபந்தன் என்னும் ராக்ஷஸனால் பீடி க்கப்பட்டவர்களாகி அந்த நிர்ப்பந்தம் பொ றுமல் அவனுடைய கைகளை வெட்டிவிட் டார்கள். பின்பு அந்தக் கபந்தன் கேட்டுக் கொண்டபடி அவனுடைய சரீரத்தை தக னஞ்செய்துவிட்டு ஸ்ரீராமன் லக்ஷ்மணரு டன் சபரியென்னும் வேடப்பெண்ணின்

ஆசிரமம் போய்ச் சேர்ந்து அவளால் பூஜிக்கப்பட்டுப் பம்பாநதிதீரம் போய்ச் சேர்ந்தார்.

அங்கே சுக்கிரீவனால் அனுப்பப்பட்ட ஹநுமார் இராமலக்ஷ்மணர்களிடம் சென்று அவர்களுடைய யோகக்ஷேமாதிவிருத்தாந்தங்களை விசாரித்து அவர்களையழைத்துப்போய்ச் சுக்கிரீவனிடம் சேர்த்து இராமனுடைய வரலாறுகளையெல்லாம் சுக்கிரீவனிடத்தில் ஹநுமார் உரைக்க அதுகேட்ட சுக்கிரீவனும் வெகு சந்தோஷத்துடன் இராமலக்ஷ்மணர்களை யாதரித்து அக்கினி முன்னிலையில் ஒருவரோடொருவர் சிநேகஞ் செய்துகொண்டார்கள்.

ஸ்ரீராமன் தான் வாலியை வதஞ்செய்கிறதாகவும் சுக்கிரீவன் தான் ஸீதையிருக்கிற இடத்தைக் கண்டுபிடிக்கிறதாகவும்

ஒருவர்க்கொருவர் பிரதிக்ஞை செய்து கொண்டார்கள்.

அதன் பின் தனக்கும் வாலிக்கும் உள்ள விரோதத்துக்குக் காரணம் இன்னதென்று சுக்கிரீவன் ஸ்ரீராமனுக்குத் தெரிவித்ததோடு வாலியினுடைய புஜபலபராக்கிரமம் முதலியவற்றைப்பற்றியும் ஸவிஸ்தாரமாகத் தெரிவித்தான். சுக்கிரீவனுக்குத்தமது பலத்தை நிதர்சனமாகக் காண்பிக்கக் கருதி துந்துபியென்னும் அசுரனுடைய பெரிதான சரீரத்தைக்காலின் பெருவிரலாலெடுத்து வெகுதூரம்போய் விழும்படி எறிந்தார். சுக்கிரீவனால் பின்னும் காண்பிக்கப்பட்ட ஏழு மரங்களையும் ஒரே பாணத்தைப் பிரயோகம் செய்து அவனுடையசந்தேகமுள்படச் சேர்த்து முறித்துவிட்டார். ஸ்ரீராமனுடைய பராக்கிரமத்தைப்பற்றிச் சந்தேகந்தெளி

ந்தவனைச் சுக்கிரீவன் அதிக சந்தோஷம டைந்து இராமலக்ஷ்மணர்களை அழைத் துக்கொண்டு கிஷ்கிந்தாநகரம் போய்ச்சேர் ந்தான்.

சுக்கிரீவன் வந்த சமாசாரங் கேட்டுக் கோபங்கொண்ட வாலி சிங்கம்போலக் கர் ஜித்தான். சுக்கிரீவனோடு போர்செய்ததில் சுக்கிரீவன் அந்த யுத்தத்தில் மிகவும் பீடிக் கப்பட்டவனாகிக் காயம்பட்ட கைகால்களு டன் ஸ்ரீராகவன் சமீபத்தில் வந்து விழுந் தான். ஸ்ரீராமனுடைய ஆக்ஞைப்படி அவ ரால் அடையாளஞ் செய்யப்பட்டவனைக் கொண்டு சுக்கிரீவன் வாலியை மறுபடி யுத் தத்திற்கு அழைத்தான். ஸ்ரீராகவன் மறை ந்துகொண்டிருந்து வாலியை ஒரு பாணத் தினால் வதஞ்செய்து பூமியில் வீழ்த்தினர். ஸ்ரீராமனென்று அறிந்த வாலி தன்னுடை

யசரீரத்தை உபேக்ஷித்து ஸ்வர்க்கப்பிராப் தனுனன். தன்னே அண்டினவர்களே ரக்ஷிக்கிறதென்று பிரதிக்ஞை செய்திருந்த ஸ்ரீராமன் அந்தச் சுக்கிரீவனே ஆசுவாஸஞ்செய்து அவன் துக்கத்தை நீக்கி அவனே வானரர்களுக்கு அதிபதியாக ஸ்தாபித்தார்.

ஸ்ரீராமர் லக்ஷ்மணரோடு மாலியபர்வதத்தின் பக்கத்தில்போய் ஸீதையைவிட்டுப் பிரிந்த துக்கத்தினுல் மனத்தில் கிலேசமுள்ளவராய் நான்கு மாதகாலம் வஸித்துவந்தார். பிறகு லக்ஷ்மணர் ஸ்ரீராமனுடைய ஆக்ஞைப்படி ஹனுமார் முதலிய வானரர்களோடு சுக்கிரீவராஜனேயழைத்ததில் அவன் ஸ்ரீராமனேப் பார்த்து அவருடைய ஆக்ஞையை எதிர்பார்க்க அவரால் அபேக்ஷிக்கப்பட்டபடி ஸீதாதேவியைத்தேட நாலு

திக்குகளிலும் வானரர்களை அனுப்பினான். ஸீதைக்கு நம்பிக்கை யுண்டாகும்படி ஸ்ரீ ராமன் ஹநுமார்கையில் தன்னுடைய முத்திரை மோதிரத்தைக் கொடுத்தார். ஹநுமாரும் அதைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீராமனைத் தண்டன் ஸமர்ப்பித்து விடைபெற்றுக்கொண்டு ஸீதாதேவியைத் தேடப் புறப்பட்டு மற்ற வானரர்களுடன் தெற்குத்திக்கை நோக்கிச் சென்றார். விந்திய பர்வதம் போய்ச்சேர்ந்து அவ்விடத்தில் ஹநுமார் பிராயோபவேசஞ் செய்ய அவ்விடத்தில் ஸம்பாதி என்னும் பக்ஷிராஜனால் சொல்லப்பட்ட ஸீதாதேவியின் இருப்பிடம் முதலிய விருத்தாந்தத்தைக் கேட்டு உடனே அங்கதன் முதலிய வானரர்களுடன் தெற்கு ஸமுத்திரத்தைப்போய்ச் சேர்ந்தார். ஆனால் ஸமுத்திரத்தைத் தாண்டி அக்க

ரையிலுள்ள லங்கைத் தீவுக்குப்போக ஒருவருந் துணியவில்லை. வாயுபுத்திரரான ஹனுமார் தம்முடைய மகத்துவத்தைப்பற்றிப்பிரஸ்தாபித்த ஜாம்பவானுடைய வார்த்தைகளால் தைரியமுண்டானவராகி மகேந்திர பர்வதத்தின் மேலே ஏறினார்.

ஸத்தியமான தேவதைகளை வந்தனஞ் செய்துகொண்டு கடலைத் தாண்டுவதற்காகப் பர்வதத்தின் உச்சியிலிருந்து லங்கையை நோக்கிப் பாய்ந்தார். அப்படித்தாண்டிப்போகும் மார்க்கத்தில் கடலின் நடுவில் மைநாக பர்வதத்தைத் தாண்டியும் நாகமாதாவை வந்தித்தும் ஸிம்ஹிகை என்கிற அரக்கியை ஹிம்ஸித்தும் மஹோததியைத் தாண்டிச் சென்றார்.

அப்புறம் லங்கமாதேவியை ஜயித்து லங்கா பட்டணத்தில் பிரவேசித்து ஸீதை

யைத் தேடிக்கொண்டு போகும்போது இரா வில் நித்திரைசெய்த இராவணனைப் பார்த் ததன்பின் அங்கங்கே ஸீதையைத் தேடி க்கொண்டே போனதில் கடைசியாக அ சோகவன மென்கிற சோலையில் மனம் புழு ங்கிப் பரவசமாயிருந்த, ஸீதாதேவியைத் தரிசனஞ் செய்து சந்தோஷத்துடன் ஒரு மரத்தின்மீது ஏறிக்கொண்டு அதன் இலை மறைவில் உட்கார்ந்துகொண்டு இவள்தா ன் ஸீதையோ வென்று ஆலோசித்துக்கொ ண்டிருந்தார்.

அப்போது இராவணன் அங்கே வந்து காமாதுரனாய் ஸீதையைப் பார்த்து நீ யெ னக்குப் பாரியையாகவேண்டுமென்று பல வாறுகக் கேட்டுக்கொள்ள அதற்கு ஸீதை இராவணனுக் கேற்றபடி பதில் சொல்லி அவனை நிராகரித்து விட்டதின்மேல் காமக் குரோதாதிகளால் சுழலப்பட்ட மனத்தை

யுடைய இராவணன் அவமானப்பட்டுத் திரும்பி அரண்மனைக்குப் போய்விட்டான். துக்கத்தினால் அழுதுகொண்டிருந்த ஸீதா தேவியை ஹனுமார் மரத்திலிருந்து கீழே இறங்கி ஸேவித்து ஸ்ரீராமனுடைய க்ஷேம சமாசாரங்களை யெல்லாஞ் சொல்லி அவ ரால் கொடுத்தனுப்பப்பட்ட அங்குலீயத் தையும் பிராட்டியின் கையில் கொடுத்தார். ஸீதை அந்த மோதிரத்தைப் பெற்றுக் கொண்டு அதைச்சிரஸால் வகித்துக் கண் ணில் ஒற்றிக்கொண்டு பகவானுடைய அ டையாளத்தைப் பார்த்த மாத்திரத்தில் கண்ணில் தாரை தாரையாக நீர் பெருக ஹநுமார் கையில் ஸ்ரீராமனிடங் கொண்டு போய்கொடுக்கவேண்டியதற்குத் தன்னு டைய சூடாமணியைப் பதில் அடையாள மாகக் கொடுத்து ஸ்வாமிக்குச் சமாசார முஞ் சொல்லியனுப்பினாள்.

ஹநுமார் அதைப்பெற்றுக்கொண்டு சிரஸால் வகித்து ஸீதாதேவிக்கு அஞ்சலிபந்தம்செய்து, 'ஏ, தேவி! தாங்கள் வியசனப்படவேண்டாம்; ஸ்ரீராகவன் யுத்தத்தில் இந்த இராவணனை வென்று தங்களைத் திரும்பவும் அழைத்துக்கொண்டு போவார். இதில் ஸந்தேகம் வேண்டாம். இது உறுதியான வார்த்தை' என்று இந்தப்பிரகாரம் தேவியைச் சமாதானப்படுத்தி அவ்விடம் விட்டுப் புறப்பட்டுவெளியில் போனார்.

போகும் மார்க்கத்தில் ஹநுமார் இராவணனுடைய உத்யான வனத்தையழித்து விட்டுத் தம்மை எதிர்த்துவந்த அக்ஷகுமாராதி ராக்ஷஸர்களெல்லோரையும் யுத்தத்தில் கொன்றுவிட்டார். பிறகு இந்திரஜித்தினுல் யுத்தத்தில்கட்டப்பட்டவராகி இராவணனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கப்ப

ட்ட. ஹநுமார் ஸ்ரீராமனுடைய பராக்கிரம முதலிய மகத்துவத்தைப்பற்றி இராவணனிடம் அச்சமின்றி விஸ்தாரமாகப் பிரஸ்தாபித்தார். அதன்பேரில் தூதனுய் வந்த ஹநுமாரை வதஞ்செய்வது சரியன்றென்று விபீஷணர் முதலானோரால் சொல்லக்கேட்ட இராவணன் ஹநுமாரை அவரது வாலைமட்டும் எண்ணெய்த்துணி சுற்றிக் கொளுத்திவிடும்படி சொல்ல அவ்விதமே ராக்ஷஸர்கள் செய்யக் கொளுத்தப்பட்ட புச்சத்தின் தீயைக்கொண்டு லங்காபட்டணம் முழுமையும் கொளுத்திச் சாம்பலாக்கிவிட்டு ஸீதாதேவியிருக்கிற அசோகவனத்தைமட்டும் அப்படியேயிருக்கும்படி செய்து ஸீதாதேவியின் அனுக்கிரகத்தால் தாம் அக்கினியில் பீடிக்கப்படாமல் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் கடலைக் கடந்து இக்கரையிலிருந்த வானரர்களுடன் ஸ்ரீராமன்

ஸந்நிதியில் வந்துசேர்ந்து ஸத்தியமான விருத்தாந்தங்களேயும் விஸ்தாரமாகத் தெரியப்படுத்தி ஸீதையால் பதில் அடையாளமாகக் கொடுக்கப்பட்ட சிரோரத்தினமாகிய சூடாமணியையும் ஸ்ரீராகவன் கையில் கொடுத்து நமஸ்கரித்தார்.

அதைக்கண்டு ஸ்ரீராகவன் மிகவும் சந்தோஷமடைந்து, சுக்கிரீவன் முதலிய ஸகல வானரஸைந்நியங்களுடன் சீக்கிரமாக மேல் மஹோததியென்னும் தென் கடற்கரை சேர்ந்தார். அங்கு இராவணனால் உபேக்ஷிக்கப்பட்ட விபீஷணர் வந்து அவரைச் சரணுகதிசெய்தார். அந்த விபீஷணருக்கு ஸ்ரீராகவன் உடனே லங்காதிபத்தியஞ் செய்து வைத்தார். ஸமுத்திரராஜனுல் கொடுக்கப்பட்ட வழியையுடையவராகி நளன் முதலிய வானரர்களேக்கொண்டு ஸேது என்ற பிர

லித்தமான அணையைக்கட்டுவித்து அதன் வழியாக ஸமஸ்த வானர ஸைந்நியங்களுடன் ஸுவேலபர்வதம்போய்ச் சேர்ந்து அங்கிருந்து இராவணயுத்தத்திற்கு வேண்டிய யத்தனங்கள் செய்து நீலன் முதலிய வானரர்களைத் தங்கள் தங்கள் கைகளில் மரங்களையும் கல்லுகளையும் எடுத்துக்கொண்டு லங்கைக்கு நாலுபக்கமும் சுற்றிக்கொள்ளும்படி ஆக்ஞாபித்தார்.

இதுகண்டு ராவணன் பிரஹஸ்தன் முதலிய மந்திரிமார்களையனுப்பவே சிங்கத்துக்குச்சமானமான பராக்கிரமமுடைய அந்த நீலன் முதலிய வானரர்கள் அந்த ராக்ஷஸர்கள் முழுமையும் அழித்துவிட்டன. பின்னும் யுத்தத்திற்கு ராவணனால் அனுப்பப்பட்டுவந்துகொண்டிருந்த அநேக ராக்ஷஸர்களை ஸுக்கிரீவன் ஹநுமாருடன் ஸ்ரீராம

லக்ஷ்மணர்கள் ஜயித்துவிட்டார்கள். பயங்கரமான பலத்தையுடைய அநேக ராக்ஷஸர்கள் மாண்டபிறகு இந்திரஜித்து நேரில் யுத்தத்திற்குவந்து நாகபாசத்தால் இராமலக்ஷ்மணர்களைக்கட்டிவிட்டான். அதன்பின்பு கருடன் அவர்களை அந்த நாகபந்தத்திலிருந்து விடுவிக்க அவர்கள் மறுபடியும் யுத்தத்திற்குச்சென்று இராவணனை நேரில் எதிர்த்து யுத்தஞ்செய்ததில் இராவணன் களைத்துச் சீக்கிரமாகவே தூக்கத்திலிருந்த தம்பியான கும்பகர்ணனை யெழுப்பி ஸ்ரீராமனை வெல்லவேண்டியதற்கு அனுப்பினான். அவன் யுத்தத்திற்கு வந்து அட்டகாசஞ் செய்யவும் வானரர்களை விழுங்கவும் செய்தான். அந்தக் கும்பகர்ணனை அவனோடு கூடவந்தவர்களுடன் ஸ்ரீராகவன் கொன்று விட்டார். மறுபடியும் அஸ்திரவித்தையில் சமர்த்தனான இந்திரஜித்து வந்து ஸ்ரீராம

லக்ஷ்மணர்கள் எல்லாரையும்பிரம்மாஸ்திர த்தால் மோஹிக்கும்படி செய்துவிட்டான். அப்பொழுது ஹநுமார் உடனேபோய் ஒஷதிபர்வதத்தைக்கொண்டுவந்து அந்தமலையிலுள்ள ஒஷதிகளால் ஸ்ரீராமலக்ஷ்மணர்களை மூர்ச்சை தெளிவித்து மறுபடியும் அந்த மலையை இருந்தவிடத்தில் சேர்த்துவிட்டார்.

பிறகு ஸ்ரீராமர் லக்ஷ்மணர் விபீஷணனோடு இந்திரஜித்து செய்த நிகும்பலையாகத்தைக்கெடுத்து யுத்தத்தில் அந்த இந்திரஜித்தையும் கொன்றுவிட்டார். அதுகேட்ட இராவணன் மிகக்கோபங்கொண்டு தானே நேரில் வந்து வானரர்களைப் பாணவர்ஷங்களால் ஹிம்ஸித்து ஸ்ரீராமனுடன் இடைவிடாது யுத்தஞ் செய்தான். ஸ்ரீராமனோ அந்த இராவணனோடு வெகுநேரம் அதிக பயங்கரமான யுத்தஞ்செய்து பிர்ம்மதேவ

ஞல் கொடுக்கப்பட்ட வரனைப் பெற்றவ
ஞன சத்துருவான இராவணனைப் பிரம்
மாஸ்திரத்தினல் கொன்றுவிட்டார்.

இப்படிக்கு இராவணவதமான சமாசா
ரம் தெரிந்த இந்திரன் முதலானோர் நிரம்
பவும் ஸந்தோஷத்தை யடைந்தவர்களாகி
ஸ்ரீராமனுடைய சிரஸில் புஷ்பவர்ஷம் வர்
ஷித்தார்கள். பின்பு ஸீதாபதி விபீஷண
ரை அந்தலங்கைக்கு அதிபதியாக்கினர்.
அக்கினிதேவனல் பரிசுத்தையென்று சொ
ல்லப்பட்ட ஸீதாதேவியை ஸ்ரீராமபிரான்
ஸ்வீகரித்துக்கொண்டு சிக்கிரமாகவே இந்
திரனுடைய வரத்தினல் யுத்தத்தில் இறந்
துபோன வானரர்களையெல்லாம் மறுபடி உ
யிர்ப்பித்து ஸந்தோஷிப்பித்து ஸீதாலக்ஷ்
மண ஸமேதராய் வானரர்களோடு கூட வி
பீஷணரையும் அழைத்துக்கொண்டு பதின

ன்காவது வருஷத்தின் முடிவில் புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டு ஆகாசமார்க்கமாக மீண்டும் அயோத்தியாபுரியை நோக்கி புறப்பட்டார். ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி இவ்வாறு அயோத்திக்குச் சமீபத்தில் வந்தவுடன் அவர் ஹநுமாரையனுப்பி நந்திகிராமத்திலிருந்த தம்பி பரதனுடைய மனத்தையறிந்துகொண்டுவர ஆக்ஞாபித்தார். பரதனோ அக்கினியை வளர்த்துக்கொண்டு தன் பிரதிக்ஞைப்படி அந்த கெடுப்படி ஸ்ரீராமர் வராவிட்டால் தான் அக்கினிப் பிரவேசஞ்செய்துவிடுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிற சமயத்தில் ஹநுமாரால் ஸ்ரீராமர் திரும்பிவருகிற சமாசாரங்கேட்டு வெகு சந்தோஷத்துடன் ஸ்ரீராமனை நந்திக்கிராமத்துக்கு எதிர்கொண்டழைத்து வந்தார். ஸ்ரீராமன் தன்னுடைய தம்பிமார்களோடுகூட நந்திக்கிராமம் விட்டுப்புறப்ப

ட்டுத்தாம் முன்னே காட்டில் பூண்டிருந்த வேஷத்தை விட்டுவிட்டுக் கிரமம்போல ஆடையாபரணங்களை யணிந்து பந்துஜனங்கள் பிரஜைகள் முதலானோர்கள் புடைசூழ்ந்து ஸந்தோஷிக்க அயோத்தியாபட்டணம் போய்ச் சேர்ந்தார்.

பின்பு கிரமப்படி வஸிஷ்டர் முதலிய பிராமணர்களோடுகூட மந்திரிகள் முதலியவர்கள் முன்னிலையில் ஸீதாதேவிஸமேதரா யிருந்த ஸ்ரீராமனுக்கு அயோத்தியில் பட்டாபிஷேகம் செய்துவைத்தார்கள்.

பூர்ணசந்திரனபோல விளங்காநின்ற ஸ்ரீராமன் ஸீதையோடுகூட ஸகலபோகங்களையும் அனுபவித்துக்கொண்டு வெகுகாலம் அயோத்தியில் ஸுகமாக ராஜ்யபரிபாலனஞ்செய்துகொண்டு வந்தார்.

---

